012218 ~~8094~~

OL/2016/42-T-I,II (NEW)



(නව නිර්දේශය/ புதிய பாடத்திட்டம்/ New Syllabus)

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

**42 | T | I, II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2016 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2016 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2016

කර්ණාටක සංගීතය I, II
கர்நாடக சங்கீதம் I, II
Carnatic Music I, II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

## கர்நாடக சங்கீதம் I

**கவனிக்க :**
(i) **எல்லா வினாக்களுக்கும் விடை எழுதுக.**
(ii) **1** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.
(iii) **உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.**
(iv) அவ்விடைத்தாளின் பிறபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, அவற்றைப் பின்பற்றுக.

**1.** இந்தியாவின் தேசிய வாத்தியம் எனப்படுவது
(1) மிருதங்கம் (2) வீணை
(3) புல்லாங்குழல் (4) நாதஸ்வரம்

**2.** ஆனந்தபைரவி இராகத்தில் சுத்தாங்கமாகப் பாடப்படுவது
(1) புராணம் (2) திருவாசகம்
(3) திருப்பல்லாண்டு (4) திருப்பாவை

**3.** "கந்தர்வ கனலோல" என ஆரம்பிக்கும் சரணத்தையுடைய கீர்த்தனையின் பல்லவி
(1) இனி நமக்கொரு கவலையும் (2) அள்ளியுண்டிடலாம் வாரீர்
(3) ஸ்ரீ இராஜராஜேஸ்வரி (4) உள்ளமிரங்கி

**4.** திருவாசகம் பாடப்படும் இராகத்திற்கு ஒப்பான பண்
(1) பழந்தக்கராகம் (2) செவ்வழி
(3) கௌசிகம் (4) முல்லைப்பண்

**5.** பின்வருவனவற்றுள் மிஸ்ரஜாதி அடதாளத்தினைக் குறிப்பது
(1) $I_7 O I_7 I_7$ (2) $I_7 I_7 O O$
(3) $I_5 O I_5 I_5$ (4) $I_9 I_9 O O$

**6.** இசைக்கச்சேரிகளில் பிரதான வாத்தியமாக வாசிக்கக்கூடிய வாத்தியங்கள்
(1) வயலின், புல்லாங்குழல், கஞ்சிரா (2) புல்லாங்குழல், தம்புரா, மோர்சிங்
(3) புல்லாங்குழல், வீணை, வயலின் (4) நாதஸ்வரம், புல்லாங்குழல், ஒத்து

**7.** கோயில்களில் இறைவன் வீதியுலா வரும்போது நாதஸ்வரத்தில் வாசிக்கப்படும் உருப்படி
(1) இராகமாலிகை (2) மல்லாரி
(3) திருவூஞ்சல் (4) நவக்ரக கீர்த்தனை

**8.** வயலின் வாத்தியம் ஒரு
(1) ஸ்திர வாத்தியம், சகல வாத்தியம் (2) சர வாத்தியம், ஏகத்வனி வாத்தியம்
(3) ஏகத்வனி வாத்தியம், நிஷ்கள வாத்தியம் (4) சர வாத்தியம், பஹுத்வனி வாத்தியம்

[பக். 2 ஐப் பார்க்க

9. "உள்ளமிரங்கி" என்ற கீர்த்தனை அமைந்துள்ள இராகம்
(1) மோகனம் (2) ஹம்சத்வனி (3) பிலஹரி (4) கல்யாணி

10. மத்தியஸ்தாயி நிஷாதத்திற்கு மேல் சஞ்சாரம் இல்லாத இராகம்
(1) நாதநாமக்கிரியை (2) நவரோஜ் (3) குறிஞ்சி (4) பிலஹரி

11. பஞ்சபுராணம் பாடும்போது திருவாசகத்திற்கு அடுத்துப் பாடப்படுவது
(1) தேவாரம் (2) திருப்பல்லாண்டு (3) திருத்தாண்டகம் (4) திருவிசைப்பா

12. பஜனைப்பத்ததியின் தந்தை எனப் போற்றப்படுபவர்
(1) ஹரிபாலர் (2) தாளப்பாக்கம் சின்னையா
(3) முத்துத்தாண்டவர் (4) அன்னமாச்சாரியார்

13. வக்ர இராகத்திற்கு உதாரணம்
(1) மோகனம் (2) பிலஹரி (3) கமாஸ் (4) சுத்தஸாவேரி

14. முத்துத்தாண்டவரால் இயற்றப்பட்ட பதம்
(1) வேலவரே (2) கண்டேன் கனவினிலே (3) அலைபாயுதே (4) தெருவில் வாரானோ

15. தோஷ நிவர்த்திக்குரிய இராகம்
(1) மத்யமாவதி (2) மோகனம் (3) கல்யாணி (4) கரஹரப்ரியா

16. "ஞானச்சிந்து", "ஞானக்கும்மி" என்பவற்றை இயற்றிய வாக்கேயகாரர்
(1) அருணாசலக்கவிராயர் (2) முத்துத்தாண்டவர்
(3) கோபாலகிருஷ்ண பாரதியார் (4) பாபநாசம்சிவன்

17. சமண சமயத்தைத் தழுவிய மகேந்திரவர்மனையும் நின்றசீர்நெடுமாறனையும் மீண்டும் சைவர்களாக்கிய பெருமைக்குரியவர்கள் முறையே
(1) திருஞானசம்பந்தர், சுந்தரர் (2) திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர்
(3) திருநாவுக்கரசர், சுந்தரர் (4) சுந்தரர், மாணிக்கவாசகர்

18. பின்வருவனவற்றில் ஹிந்துஸ்தானி சங்கீதத்திற்குப் பொருத்தமான கூற்று
(1) கரஹரப்ரியா இராகத்தை இங்கு பிலாவல் என அழைப்பர்.
(2) 35 பிரதான தாளங்களை இங்கு பயன்படுத்துவர்.
(3) இது வட இந்திய மக்களின் பிரதான இசைமரபு ஆகும்.
(4) வயலின் பிரதான வாத்தியமாக இங்கு பயன்படுத்தப்படுகிறது.

19. "பண்ணும் பதமேழும்" என்னும் தேவாரத்தின் பண், தாளம் என்பன முறையே
(1) நட்டபாடை, சதுஸ்ர ஏகம் (2) கொல்லி, ரூபகம்
(3) நட்டராகம், ஆதி (4) நட்டபாடை, ரூபகம்

20. வாத்திய இசையைக் கேட்கும்போது அவ்வாத்தியத்தினை இனங்காண உதவுவது
(1) வாசிக்கும் கலைஞனின் கற்பனைத்திறன் (2) அவற்றின் தனித்துவமான ஒலிப்பண்பு
(3) வாசிக்கப்படும் உருப்படிகள் (4) பயன்படுத்தப்படும் நவீன ஒலிபெருக்கிச் சாதனங்கள்

21. ஆதிதாள வர்ணத்தினை முதலாம் காலத்தில் பாடும்போது அட்சரம் ஒன்று எடுத்துக்கொள்ளும் ஸ்வரங்கள்
(1) 1 (2) 2 (3) 4 (4) 8

22. பின்வரும் தேவாரங்களில் திருக்கேதீச்சரத் தலத்தின் மீது பாடப்பட்டது
(1) மானினேர் விழி மாதராய் (2) பண்ணும் பதமேழும் (3) பண்டு நால்வருக்கு (4) நிரைகழலரவம்

23. "சின்னஞ்சிறுகிளியே" என்ற இராகமாலிகையில் "கன்னத்தில் முத்தமிட்டால்" என்ற பாடல் பகுதி அமைந்துள்ள இராகம்
(1) மாண்டு (2) வசந்தா (3) நீலமணி (4) திலங்

24. ஒரு வர்ணத்தின் சரணத்தையும் சரண ஸ்வரங்களையும் உள்ளடக்கிய பகுதி
(1) திரியாங்கம் (2) ஷடாங்கம் (3) பூர்வாங்கம் (4) உத்தராங்கம்

[பக். 3 ஐப் பார்க்க

**25.** "ஶ்ரீ இராஜராஜேஸ்வரி" என்ற கல்யாணி இராக கீர்த்தனையை இயற்றியவர்
(1) டி. வி. பிச்சையப்பா
(2) நீலா ராமமூர்த்தி
(3) வீரமணிஐயர்
(4) பொன் ஶ்ரீ வாமதேவன்

**26.** இரட்டைப் பெயர்களுடன் விளங்கும் ஸ்வரஸ்தானங்களாவன
(1) சுத்தரிஷபம், சாதாரண காந்தாரம், சுத்ததைவதம், காகலி நிஷாதம்
(2) சதுஸ்ருதி ரிஷபம், சாதாரண காந்தாரம், சுத்த தைவதம், காகலி நிஷாதம்
(3) சதுஸ்ருதி ரிஷபம், சாதாரண காந்தாரம், சதுஸ்ருதி தைவதம், கைசிகி நிஷாதம்
(4) சுத்த ரிஷபம், சாதாரண காந்தாரம், சதுஸ்ருதி தைவதம், கைசிகி நிஷாதம்

**27.** இராகமாலிகையில் ஒவ்வொரு இராகத்தின் முடிவிலும் பல்லவியின் ஆரம்ப இராகத்தில் அமையும் சிட்டை ஸ்வரத்திற்குரிய பெயர்
(1) கற்பனாஸ்வரம்
(2) மகுடஸாகித்தியம்
(3) மகுடஸ்வரம்
(4) முத்தாயிஸ்வரம்

**28.** $\overline{\text{ஸ்ாநீதபதா}}$ $\overline{\text{நிதா;;த}}$ பா; என்னும் ஸ்வரக் கோர்வையின் மொத்த அட்சரகாலம்
(1) 8
(2) 10
(3) 12
(4) 14

**29.** வாசிக்கும் முறையினால் அதத, விதத வாத்தியம் என அழைக்கப்படும் வாத்தியம்
(1) மிருதங்கம்
(2) தவில்
(3) தபேலா
(4) நாதஸ்வரம்

**30.** வயலின் வாத்தியத்தினை வாசிப்பதில் பிரபல்யமாக விளங்கிய இந்தியக் கலைஞர்
(1) புத்துவாட்டி சோமு
(2) எஸ். பாலச்சந்தர்
(3) டி. என். கிருஷ்ணன்
(4) டி. வி. பிச்சையப்பா

**31.** பின்வரும் வரைபினால் குறிப்பிடப்படும் இராகம்




(1) சிம்ஹேந்திரமத்யமம்
(2) பந்துவராளி
(3) கல்யாணி
(4) மாயாமாளவகௌளை

**32.** முத்துஸ்வாமி தீக்ஷிதர் இயற்றிய முதலாவது உருப்படி
(1) ஶ்ரீ கணபதி
(2) கஞ்சதளாயதாக்ஷி
(3) ஶ்ரீ நாதாதி
(4) அக்ஷயலிங்க

**33.** "ஸ்வரமேளகலாநிதி" என்னும் சமஸ்கிருத கிரந்தத்தை எழுதியவர்
(1) ராமாமாத்யர்
(2) க்ஷேத்ரக்ஞர்
(3) பச்சிமிரியம் ஆதியப்பையர்
(4) வேங்கடமகி

**34.** ஸரகிமபதநி என்னும் ஸ்வர ஸங்கேதங்களால் குறிக்கப்படும் இராகம் யாது?
(1) சங்கராபரணம்
(2) கல்யாணி
(3) தோடி
(4) கரஹரப்ரியா

**35.** தெலுங்கு, வடமொழி, தமிழ் ஆகிய மூன்று மொழிகளிலும் உருப்படிகளை இயற்றிய வாக்கேயகாரர்
(1) புரந்தரதாஸர்
(2) தியாகராஜ ஸ்வாமிகள்
(3) சியாமா சாஸ்திரிகள்
(4) முத்துஸ்வாமி தீக்ஷிதர்

[பக். 4 ஐப் பார்க்க

**36.** வேங்கடமகி அவர்களின் வழித்தோன்றலாக வந்த வாக்கேயகாரர்
(1) தியாகராஜ ஸ்வாமிகள்
(2) புரந்தரதாஸர்
(3) பாபநாசம்சிவன்
(4) முத்துஸ்வாமி தீக்ஷிதர்

- கீழே தரப்பட்டுள்ள ஸ்வரத்தொகுதியினை அடிப்படையாகக் கொண்டு **37** தொடக்கம் **39** வரையான வினாக்களுக்கு விடை தருக.

**பா, / தஸ் / நித // பத்நி / பத / பா //**
**மகரி / ஸா / நித // ஸரிக / பம / கரி //**

**37.** இவ் ஸ்வரத்தொகுதியில் உள்ள ஆவர்த்தனங்களின் எண்ணிக்கை, அமைந்துள்ள தாளம் என்பவை முறையே
(1) 2, சதுஸ்ர ரூபகம்
(2) 4, திஸ்ர திரிபுடை
(3) 6, சதுஸ்ர திரிபுடை
(4) 8, திஸ்ர திரிபுடை

**38.** இவற்றில் அன்னிய ஸ்வரம் வருவது
(1) முதலாம் ஆவர்த்தனத்தில்
(2) இரண்டாம் ஆவர்த்தனத்தில்
(3) மூன்றாம் ஆவர்த்தனத்தில்
(4) நான்காம் ஆவர்த்தனத்தில்

**39.** இவற்றில் தீர்க்க ஸ்வரங்களாக வருவது
(1) ப, ஸ
(2) ஸ, ம
(3) த, ப
(4) த, ஸ்

**40.** பின்வரும் கூற்றுகளைக் கருதுக.
A - பேரின்ப பதங்களை இயற்றியவர்.
B - தமிழில் பஞ்சரத்ன கீர்த்தனைகளை இயற்றியவர்.
C - "அருமருந்தொரு" எனும் கீர்த்தனையை இயற்றியவர்.
D - "அனுமார் பிள்ளைத்தமிழ்" எனும் நூலை இயற்றியவர்.

மேற்கூறப்பட்டவற்றுள் முத்துத்தாண்டவர் பற்றிய சரியான கூற்றுகள் எவை?
(1) A, C மாத்திரம்
(2) A, D மாத்திரம்
(3) B, C மாத்திரம்
(4) B, D மாத்திரம்

* *

|பக். 5 ஐப் பார்க்க

නව නිර්දේශය/ புதிய பாடத்திட்டம்/ New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

42 T I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2016 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2016 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2016

කර්ණාටක සංගීතය I, II
கர்நாடக சங்கீதம் I, II
Carnatic Music I, II

## கர்நாடக சங்கீதம் II

**கவனிக்க:**
※ **முதலாம்** வினாவையும் வேறு **நான்கு** வினாக்களையும் தெரிவுசெய்து எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக.

**1.** பின்வரும் வினாக்களுக்குச் சுருக்கமான விடை எழுதுக.

(i) குற்றாலக் குறவஞ்சியை இயற்றியவர் யார்?

(ii) விவாதி மேளங்கள் எத்தனை?

(iii) நாடோடிப் பாடல்களிலிருந்து தோன்றிய தாளம் யாது?

(iv) ஸ்ட்ராடிவேரியஸ் எனும் ஐரோப்பியரால் உருவாக்கப்பட்ட வாத்தியம் யாது?

(v) தோடி இராகத்தின் நேர் பிரதிமத்யம ராகம் யாது?

(vi) உலகிலே காணப்படும் மிகப் பழமையான துளைக்கருவி யாது?

(vii) "விரிபோணி" என்னும் பைரவி இராக அடதாள வர்ணத்தை இயற்றியவர் யார்?

(viii) வீணை வாசிப்பதில் கைதேர்ந்தவர்களை எச்சிறப்புப் பெயரால் அழைப்பர்?

(ix) திஸ்ரஜாதி துருவதாளத்தின் மொத்த அட்சர எண்ணிக்கையை ஒத்த வேறு **இரு** தாளங்களைத் தருக.

(x) முத்துஸ்வாமி தீக்ஷிதர் இயற்றிய **இரு** நவாவர்ணக் கீர்த்தனைகளின் பெயர்களைத் தருக.

**2.** பின்வரும் இராகங்களுள் விரும்பிய ஓர் இராகத்தின் இலட்சணத்தை விரிவாகத் தருக. (உருப்படிகள், சஞ்சாரங்கள் என்பன எழுதப்படல் வேண்டும்.)

(i) ஹரிகாம்போஜி

(ii) ஆரபி

(iii) கல்யாணி

**3.** பின்வரும் உருப்படிகளில் விரும்பிய ஓர் உருப்படியின் இலட்சணத்தை விரிவாகத் தருக. (இயற்றியவர் பெயர்கள், உதாரணங்கள் இவ்விரண்டு தரப்படல் வேண்டும்.)

(i) வர்ணம்

(ii) பதம்

(iii) ஜதீஸ்வரம்

**4.** (i) நாதஸ்வரத்தின் படத்தினை வரைந்து பாகங்களைக் குறிப்பிடுக.

(ii) இவ்வாத்தியத்தின் அமைப்பினை விளக்குக.

(iii) இவ்வாத்தியத்தின் சிறப்புக்கள் **இரண்டினைக்** கூறுக.

(iv) இவ்வாத்தியத்தை வாசிக்கும் முறையினைத் தருக.

(v) இவ்வாத்தியத்தை வாசித்து பிரபல்யமடைந்த வித்துவான்கள் **இருவரினது** பெயர்களைத் தருக.

[பக். 6 ஐப் பார்க்க

5. தியாகராஜ ஸ்வாமிகளின் வாழ்க்கை வரலாற்றினையும் அவரது இசைப்பணிகளையும் பின்வரும் விடயங்களின் கீழ் ஆராய்க.

(i) வாழ்க்கைக் காலம்

(ii) பிறந்த இடம்

(iii) பெற்றோர்

(iv) இளமைக் கல்வி

(v) வாழ்க்கைச் சம்பவங்கள்

(vi) இசைப் பணிகள்

(vii) இயற்றிய உருப்படிகள்

(viii) இவர் கையாண்ட அபூர்வ இராகங்கள்

6. (i) தற்கால வழக்கிலுள்ள பண்கள் எத்தனை?

(ii) அவற்றுள் எட்டுப் பண்களையும் அவற்றிற்கு ஒப்பான இராகங்களையும் தருக.

(iii) பண்களுக்கும் இராகங்களுக்கும் பொதுவான பண்புகள் **நான்கினைத்** தருக.

(iv) கானகாலத்தை அடிப்படையாகக் கொண்ட பண்களின் பிரிவுகளைக்கூறி அவற்றிற்கு ஒவ்வொரு உதாரணங்களையும் தருக.

7. (i) 72 மேளகர்த்தா அமைப்பில் வரும் முதல் ஆறு சக்கரங்களினதும் பெயர்களைத் தருக.

(ii) 4 வது சக்கரத்தில் வரும் இராகங்களையும் அதன் மேள எண்களையும் சங்கேதாட்சரங்களையும் முறையே தருக.

(iii) அவ்விராகங்களின் ஸ்வரஸ்தானங்களைக் கிரமமாக எழுதுக.

**அல்லது**

"இந்திய இசை வரலாற்றில் 14ஆம் 15ஆம் நூற்றாண்டுகள் பிரதான காலகட்டங்களாகும்." இக்கூற்றின் பொருத்தப்பாட்டினை ஆராய்க.

* * *